உ சிவமயம்.





இராக த்வேஷ ப்ரகரண ஸாரமென்னும்

# ஹேயோபாதேய சதுஷ்கம்.

ஸ்ரீ சிதம்பரத்தில் எழுந்தருளியிருந்த

**ஸ்ரீ கோயிலூர்**

**ஸ்ரீ-ல-ஸ்ரீ பொன்னம்பல ஞானதேசிக சுவாமி**

அவர்களின்

**மடாலய வெளியீடு.**

இதன் விலை அணா 1.

உ சிவமயம்.





இராக த்வேஷ ப்ரகரண ஸாரமென்னும்

# ஹேயோபாதேய சதுஷ்கம்.

ஸ்ரீ சிதம்பரத்தில் எழுந்தருளியிருந்த

ஸ்ரீ கோயிலூர்

ஸ்ரீ-ல-ஸ்ரீ பொன்னம்பல ஞானதேசிக சுவாமி

அவர்களின்

மடாலய வெளியீடு.

இதன் விலை —— அணா 1.

உ
சிவமயம்.

## முகவுரை.

மலர்தலை யுலகில். அறம் பொருள் இன்பம் வீடென்னும் உறுதிப்பொருள் நான்கனுள் வீடு ஒன்றே சிறந்த பயனையுள்ளது. எதனாலெனின், அறம் பொருள் இரண்டும் சாதன வடிவமா யிருத்தலாலும், இன்பம் சாத்திய வடிவமா யிருப்பினும் விஷங்கலந்த தேன்போல ஆயிரந் துக்கத்தோடு கூடியிருத்தலாலும், வீடு பரம சாத்திய வடிவமாய்ச், சர்வ துக்க நிவிர்த்தி பரமானந்தப் பிராப்தி வடிவமா யிருத்தலாலு மென்க. இத்தகைய வீட்டினை யடைவதற்கு இராகாதி குணங்களின் நீக்கமும், பக்தி முதலிய குணங்களி னடைவும் இன்றியமையாத சாதன மென்பது கருதியும், கீதை முதலிய சாஸ்திரங்களின் தாற்பரியத்தை யநுசரித்தும் சில வருஷங்களுக்கு முன் ஒரு பெரியார் செய்த இராக த்வேஷ ப்ரகரணத்தைச் சுருக்கிப் பிற்காலத்தில் ஒரு அடியார் செய்யுளாகச் செய்தனர்! அதனை யிப்போது திருத்தஞ் செய்து சகலரும் ஓதியுணர்ந்து உய்தற்பொருட்டு அச்சிற் பதிப்பித்து வெளியிட்டிருக்கிறோம்.

இங்ஙனம், கோ. ஆ. அண்ணாமலைசுவாமி.

உ

சிவமயம்.

# இராக த்வேஷ ப்ரகரண ஸாரமென்னும் * ஹேயோபாதேய சதுஷ்கம்.

சொரூப வணக்கம்.

எதன்கண்ணே நிலையாகி யிருந்திடுமிவ் வுலகமெலா
மெதன தெல்லாம் 2
எதனின்றிவ் வனைத்துலகு மெழுமோமற் றிவையாவு
மெதன்பொ ருட்டாம்
எதனாலிவ் வையமெலா மெழுந்திடுமிவ் வெல்லாமு
மெதுவே யாகும்
அதுதானே யுளபொருளாஞ் சத்தியமா மச்சொருப
மகத்தில் வைப்பாம்.

* ஹேயோபாதேய சதுஷ்கம்=தள்ளத்தக்க கொள்ளத்தக்க குணங்களைக்கூறும் நான்குசெய்யுளையுடைய(சிறு)நூல்.



**(குறிப்புரை.)** எதனின்று என்றதால் ஜகத்துக்கு விவர்த்தோபாதான காரணத் தன்மையும், எதனால் என்றதால் ஜகத்துக்கு நிமித்தகாரணத் தன்மையும் ஒரே பரம் பொருளுக்கு உண்டென்பது கொள்ளக் கிடந்தது. இவை யாவும் எதன் பொருட்டாம் என்ற வாக்கியமானது பதி முதலியோர்களிடத்துள்ள பிரியம் தன்பொருட்டேயன்றி அப் பதி முதலியோர்களின் பொருட்டன்று என்னும் சுருதிப் பொருளைத் தன்னகத்தே கொண்டுள்ளது. 3

## தள்ளத்தக்க இராகாதி பதின்மூன்று குணங்களின் சொரூபம்.

பன்னிருசீர் விருத்தம்.

நாகவமிர் தனையரிவ ரெனுநசை யிராகமாம்
நள்ளார்க ணதுதுவேஷம்
நாடுபொருள் விக்கின கரர்ச்செறல் குரோதமாம்
நாணு வவாகாமமாம்

மோகமது சற்புத்தி ராதியார் தமிற்பிரியம்
முறையினீ யாமைலோபம்
மூடமகி ருத்திய கிருத்தியங் களின்மதம்
முன்னு தனத்தொடுபிறர்
போகமுயர் செல்வம் பொருமைமற் சரமென்ப
பொல்லாத துன்பமதுறின்
புறத்தொரு வருக்குவரல் வேண்டுமென லீரிஷை
பொய்யா மசூயையின்பம்
தாகமற வொருவர்க்கு வருதல்வேண் டாமென்னல்
தன்னைமெச் சுதலிடம்பம்
தருப்பமிகு பெரியவன் ருனென லகங்கரந்
தன்பிடி விடாதபிடியே.

(சூ—ரை.) இவர்=இம்மங்கையர், நள்ளார் கணது=அபகாரிகளை விஷயமாகவுடையது, நாடு பொருள் விக்கினகரர்ச்செறல்= விரும்பிய பொருளை யடையவொட்டாமல் இடையூறு செய்கின்றவரை வெறுத்தல். கிருத்தியாகிருத்தியங்களின் மூடம் மதம். (க)





## இராக முதல் மதம் வரை ஏழு குணங்களுக்கு உதாரணம்.

பரதார ராகமுள ராவண னிறந்தனன்
பகவனூர் தாசரதியால்
பகைத்திறஞ் சேர்துவே ஷங்கொளிர ணியனுயிர்
பாரிற்று நாரணர்தமால்
சுரமாது போல்பவர்க் கொணர்காம முளநரகர்
துஞ்சினூர் தூயஹரியால்
துப்புடைய வீமன்கு ரோதமுள பகனுயிர்
தொலைத்தன னிலைத்தவவனால்
வரமான பங்கைக் கொடாதலோ பந்துன
மடிந்தனன் றுரியோதனன்
மைந்தர்மோ கங்கொளத் தசரதர் மஹாமூர்ச்சை
மன்னினர் வனஞ்சுதர்செலப்
பரமான நாரதர்ப் பணியா மதத்திறூற்
பார்த்திவன் கார்த்தவீர்யன்

பரசுரா மப்பெயர்கொள் ஜாமதக் கினியராற்
பருவுடலை விட்டனனரோ.

(கு-ரை.) சுரமாது போல்பவர்க்கோணர் = தேவ மங்கையர் போல்பவரைக் கொண்டுவந்த, நரகர் = நரகாசுரர், பகன் = பகாசுரன். (உ)



## மற்சர முதல் அகந்தை வரை ஆறு குணங்களுக்கு உதாரணம்.

கைம்மிகுஞ் சிசுபாலன் மற்சரஞ் சேரவுயிர்
கண்ணனுன் மறைவுற்றது
கருதுமரு ஞக்ஷனீ ரிஷைசெறிய வாணனுற்
கதறியங் கஞ்சிதறினுன்
மைம்மிகு மசூயையுற நல்வாசு தேவனுன்
மலபவுண் டரீகனென்னும்
மறுவாசு தேவனுடல் மாண்டது நபூருவன்
மகத்தைமதி டம்பமடைய



மெய்ம்மிகுந் துர்வாச வித்தகர்த மாலழிவு
மேவினன் சதகந்தரன்
விமலையாஞ் சீதையான் முன்னுடல் தருப்பமதின்
விண்டுவேற் றுடல்கொண்டனன்
பொய்ம்மிகுந் துள்ளமது கைடவ ரகந்தையாற்
பொன்மருவு மறுமார்பனுல்
பொன்றினர்க ளாதலாற் றுன்றுக முயற்சியுயர்
புந்திய ரிவற்றைவிடவே.

(கு-ரை.) கைம்மிகும் சிசுபாலன் = பிறக்கும்பொழுது நான்கு கைகளையுடைய சிசுபாலன். (ங)



## கொள்ளத்தக்க பக்தி சிரத்தை இச்சைகளின் சொரூபமும், உதாரணமும்.

கட்டளைக் கலித்துறை.

வரத்தை யடியார்க் கருளீசர் பாலும் மலர்ந்தபரா,
பரத்தை யருள்குரு நூலிலுஞ் செய்யன்பைப் பத்தி
யொடு, சிரத்தை யென்பார்விருப் பன்னந்தண் ணீரா

திகளிலிச்சை, திரத்தன்மை வீடிவற் ருற்கட்டு வாங் கதர் சேர்ந்தனரே.

(கு-ரை.) ஈசர்பாற் செய்யு மன்பைப் பத்தியென் பார், குருநூலிற் செய்யுமன்பைச் சிரத்தையென்பார், அன்னந் தண்ணீராதிகளில் விருப்பு இச்சையென்பார் என ஒட்டுக. ஆதி சப்தத்தால் சௌச ஸ்நானங்களைக் கொள்க. இவற்றால்=பக்தி சிரத்தைகளால். (அ)

## குரு வணக்கம்.

ஆன தாகி யழிந்தொழி யாவண
மூனை நானென தென்றுண ராவகை
தான தாகிய தன்மை யளித்திடும்
ஞான வானைதன் ஞமம் நவிற்றுவாம்.

அடியேனை யாள வருண்மேனி சாத்திப்
படிமீது வந்த பரனே—கொடியேனென்
றெண்ணு திமைப்பளவி லிங்ஙனே வீடளித்த
கண்ணு கடைபோகக் கா.

இராக த்வேஷ ப்ரகரண ஸாரமென்னும் ஹேயோபாதேய சதுஷ்கம் முற்றிற்று.

ஸர்வஞ் சிந்மயம்.

சுபமஸ்து.

பாண்டியன் அச்சகம், சிதம்பரம்,

| பாட்டு | வரி | பிழை | திருத்தம் |
| --- | --- | --- | --- |
| 1 | 5 | புத்திராதியார் | புத்திராதியர் |
| 2 | 4 | பாரிற்று | பாறிற்று |



| பாட்டு | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 1 | 5 | புத்திராதியார் | புத்திராதியர் |
| 2 | 4 | பாரிற்று | பாறிற்று |